உக்கிரத்தில் எந்த பல முண்டோ—அந்த பலத்தோடு அவள் எங்களுக்கு வருக. ௪ இராஜன்யன் துந்துபி சரம் அசுவ பலம் புருஷ கர்ச்சனையில் எந்த பல முண்டோ—அந்த பலத்தோடு அவள்எங்களுக்கு வருக. [௬. ௩௮. ௧—௪.]

௨௧௨ பிரார்த்தனை [வர்சஸ்காம அதர்வன்—பிருகஸ்பதி]

௧ பண்புடனாகி, பலத்தால் செய்யப் பட்டு ஆயிரம் பலங்களுள்ள இந்திரனால் துரிதமாகி, எனது அவி புகழா யோங்கட்டும்; அவி கொண்டு வருபவனாகியும் பலத்துடன் தீர்க்கப் பார்வைக்குச் செல்பவனு மான என்னைத் தலைவனாக்க நீ வளர்த்திடுக. ௨ புகழ் மிகும் புகழுள்ள இந்திரனை நாங்கள் வணக்க மளித்து புகழ்களால் போற்றுகிறோம்; இந்திரனால் துரிதமாக்கப் பட்டு எங்களில் இராஷ்டிரத்தை யளி: உனது அளிப்பில் நாங்கள் புகழுள்ளவர்களாக வேண்டும். ௩ புகழுள்ளவன் இந்திரன், புகழுள்ளவன் அக்கினி; புகழுடன் ஸோமன் புலனாவான்; புகழுள்ள எல்லாப் பொருள்களிலும் நான் அதி புகழுள்ளவன். [௬. ௩௯. ௧—௩.]

௨௧௩ பயமின்மை [௧—௨ அபயகாமன் ௩ ஸ்வஸ்த்யயனகாம அதர்வன்—மந்திரோக்தம்]

௧ ஜோதியே புவியே! எங்களுக்கு இங்கு பயமின்மை யாகுக; சோமனும் சவிதாவும் எங்களுக்கு பயமின்மையைச் செய்க, விசாலவானமும் எங்களுக்கு பயமின்மை யாகுக; எழுரிஷிகளின் அவியால் எங்களுக்கு பயமின்மை யாகுக. ௨ நான்கு திசைகளும் இந்த கிராமத்

௨௧௧ கருத்து—புலி, பாம்பு, சிங்கத்தின் பலத்தை யடையுங்கள்.
௨௧௨ கருத்து—இந்திரனால் ராஷ்டிரத்தைப் பற்றுங்கள்.



துக்கு—நன்மையைச் செய்க; சவிதா எங்களுக்கு உறுதியையும் உயரிய செழிப்பையும் சுவஸ்தியையும் செய்க; இந்திரன் பயமின்மை பகையின்மையைச் செய்க; அரசர்களின் கோபம் வேறு அந்நிய நிலயத்தில் வீழ்க. ௩ இந்திரனே! எங்களுக்கு எதிரி சூனியத்தை கீழே சாய்; மேலே எதிரிசூயத்தை சாய். எதிரி சூனியத்தை பின்—புறஞ்—சாய்; எதிரி சூனியத்தை முன்—புறஞ் சாய். [௬. ௪௦. ௧—௩.]

௨௧௪ ஆத்மசக்தி [பிரம்மா—வெகுபல உதசந்திரமன்]

௧ நாங்கள் மனத்துக்கு நினைவுக்கு அறிவுக்கு நோக்கத்துக்கு விருப்பத்துக்கு புலனுக்கு செவிக்கு கண்ணுக்கு கர்க அவியால் போற்றுவோம். ௨ அபானனுக்கு, வியானனுக்கு, பிராணனுக்கு, புஷ்டிப் பிராணனுக்காக விசாலவிரிவுடனான சரஸ்வதியை நாங்கள் அவியால் போற்றுவோம். ௩ திவ்யரிஷிகள், எங்களை எங்களது காயகாப்பை, எங்கள் காயப்புலன்களை பிரியாமலாவார்களாக; மரிப்பில்லாதவர்களே! மரிக்கும் எங்களை நீங்கள் அணுகுங்கள்; நாங்கள் நீண்டவாழ—தீர்க்கா—யுசையளியுங்கள். [௬. ௪௧. ௧—௩.]

௨௧௫ என் விருப்பம் [பரஸ்பர சித்தைக் கரணே பிருகுவங்கிரஸன்—௧ மன்யு]

௧ நாம் ஒருமனமுடன் ஒருமையாகி நண்பர்கள் போலிருக்க உன் கோபத்தை வில்லினின்று நாண்போல் உன் இருதயத்தினின்று நீக்குகிறேன். ௨ நாம் இருவர்

௨௧௩ கருத்து—பகை யொழிய பயமின்மை பற்று.
௨௧௪ அவி என்னும் நீங்கள் செய்வதற்காகும் கடமைச் செயலால், ஆத்மசக்தி யடைவதற்கு முயலுங்கள்.

களும் நண்பர்கள்போல் ஒன்று சேர்ந்திருப்போம்; நான் உனது கோபத்தை நீக்குகின்றேன்; நாங்கள் உனது கோபத்தை கனத்த கல்லின் கீழே தள்ளுகிறோம். ங நீ அடங்கிப்பேசு என் விருப்பத்துக்கமை, குதிகாலாலும் முன் காலாலும் நான் உனது கோபத்தை மிதித்துத் தள்ளுகிறேன். [சு. சஉ. க—ங.]

உகசு தருப்பை[1] [பரஸ்பரைகசித்த கரணே பிருகுவங்கிரன்—மன்யு சமனம்]

க உற்றானுக்கும் மற்றானுக்கும் கோபம் நீக்குவது இத் தருப்பை: இது கோபத்தின் கோபமழிக்கும் கழிகோபம் எனப்படும். உ இதற்கு பல மூலங்களுண்டு, இது கடலடிசெல்லும்; புவியினின்று தோன்றும் தருப்பை தளர் கோபன் எனச் சொல்லப் படும். ங நீ அடங்கிப் பேசு என்விருப்பத்துக்கு அடங்கு. உன் மெய்வாய்களின் குற்றத்தை நாங்கள் நீக்குகிறோம். [சு. சங. க—ங.]

உகஎ விஷாணகன் [விசுவாமித்திரன்—மந்திரோக்த உத வனஸ்பதி]

க ஜோதி நின்றுள்ளது. புவி நின்றுள்ளது. இந்த விசுவமும் நின்றுள்ளது. உச்சமயரும் மரங்களும் நின்றுள்ளன. இந்த உனது நோயும் நிற்கட்டும். உ உனது நூறு, ஒன்று சேரும் ஆயிரம் சிகிச்சைகளுடன் நீ ஒழுக்குக்கு—ஆஸ்ரவம்—உயரிய ஔஷதம், ரோகம் நீக்குவதில் சிறந்தவன். ங நீ ருத்திரனின் மூத்திரம்,

1 இருதயம் மனம்.

உகரு கருத்து—உனது விருப்பம்போல் எதிரி கோபத்தை மிதித்து விடு.

உகசு கருத்து—தருப்பை என்னும் சக்தியால் சத்துரு கோபம் நீக்கு.



அமிருத நாபி; விஷாணகை[1] என்பது—உனது பெயர்; பிதருக்களின் மூலத்தினின்று தோன்றி; நீ வாதநோயை யழிப்பவன். [சு. சச. க—ங.]

உகஅ என் மனம் [பிரசேத அங்கிரசன், யமன்—துச்சுவப்ன நாசன தேவதை]

க மனத்தின் மாசே! நீ தூரஞ்செல்லு. சொல்லத் தகாதவைகளை ஏன் சொல்லுகிறாய்? நீ சென்றுவிடு; நான் உன்னை விரும்ப வில்லை: மரங்களில் வனங்களில் நீ சஞ்சரி; வீடுகளிலும் பசுக்களிலும் என்—மாசற்ற—மனமுண்டு. உ விழிப்பிலோ தூக்கத்திலோ கீழ்ச் சொல் வெளிச் சொல் புறச் சொல்லால் நாங்கள் குற்றஞ் செய்திருந்தால், அக்கினி, பொருந்தாத எல்லாப் புன் செயல்களையும் எங்களிட மிருந்து நீக்குவானாக. ங நாங்கள் பொய் யனுசரித்தால், இந்திரனே! பிரமணஸ்பதியே முன்னறியும் அங்கிரஸன் துன்பம் தூக்கத்தினின்று எங்களைக் காத்திடுக. [சு. சரு. க—ங.]

உககூ தூக்கமே! [அங்கிரஸன்—துச்சுவப்ன நாசன் தேவதை.]

க நீ சாவ தில்லை, நீ ஜீவிப்ப தில்லை; தூக்கமே நீ தேவர்களின் அமிருத கருப்பம்; வருணானி உனது தாயாவாள்; யமன் உன தந்தை; உனது பெயர் அராரு. உ தூக்கமே! உனது சனனஸ்தானத்தை நாங்கள் அறிவோம்; நீ தேவ சகோதரிகளின் மகன்; நீ யமனின் காரியம்; நீ அந்தஞ் செய்பவன், நீ மிருத்யு தூக்கமே! நாங்கள் உன்னை நன்கறி வோம்;

1 ஒரு மூலிகை பெயர்.

உகஎ கருத்து—விஷாணகையால் வியாதி விலக்கு.

உகஅ கருத்து—மாசற்ற மனமுடன் மேலான நிலைசெல்லு.

தூக்கமே! எங்களைக் கெட்ட கனவினின்று கா. ரு கடனை விசம் அரைக்கால் பூரணமாய் திருப்பிச் செலுத்துவது போல் எங்களை வெறுப்பவனுக்கு அப்படித் தீக்கனவுகளையெல்லாம் ஒன்று செலுத்துகிறோம். [சு. சசு. க—ரு.]

உ௨௦ பிரார்த்தனை [அங்கிரஸன்—க அக்கினி. உ விசுவே தேவன். ௩ ஸௌதன்வர்கள்.]

க அக்கினி காலை யக்ஞத்தில் எங்களைக் காக்கட்டும்; அவன் வைசுவா நரன், எல்லாஞ் செய்பவன், எல்லாச் சுகமளிப்பவன், சுத்தஞ் செய்பவன், எங்களைச் செல்வத்தில் ஸ்தாபிப்பானாக; நாங்கள் ஒருமையுடன் புசித்து ஒங்குமாயுசுடன்—வாழவேண்டும். உ இந்திரன் மருத்துக்கள் விசுவே தேவர்கள் எங்களை இந்த இரண்டாவது யக்ஞத்தில் விடாமலாகட்டும். நாங்கள் நீண்ட ஆயுஸோடாகி தேவர்களுக்குப் பிரியமாய் மொழிந்து கொண்டு அவர்களின் நல் மனத்திலாகவேண்டும். ௩ ருதத்தால்—யக்ஞ—பாண்டத்தை பொருந்தச் செய்யும் ரிஷிகளின் மூன்றுவது யக்ஞமே இது; சுவர்க்கத்தை யடைந்துள்ள ஸௌதன்வர்கள் எங்களது சீரிய செயலை சிலத்துக்குச் செலுத்துக. [சு. சஎ. க—ரு.]

உ௨க முப்பிரிவு [?—மந்திரோக்த ரிஷி]

க நீ காயத்திரீ சந்த கருடனுவாய், நான் உன்னைப் பற்றுகிறேன்; யக்ஞ முடிவில் என்னை மேன்மைக்குச் செலுத்து: சுவாஹா! உ நீ ஜகதீ சந்த ரிபு; நான் உன்னைப் பற்றுகிறேன்..........................................................சுவாஹா! ௩ நீ திருஷ்டுபுச் சந்த விருஷபன்; நான் உன்னை............ ..........................................................சுவாஹா! [சு. சஅ. க—ரு.]

௨௨௨ அக்கினி [அப்யகாம அதர்வன் – அசுவினி]

க அக்கினியே! மானிடன் உனது காய குரூரத்தைக் கண்டதே யில்லை; பசு ஜராயுவைப்போல குரங்கு கனலைப் புசிக்கும். உ கீழ்[1] மேற்கல்லைப்[2] புசிக்குங்கால் நீ ஆட்டைப்போல் அணுகி அகலுகிறாய்; சிரத்தைச் சிரத்துடன் மார்பை மார்புடன் தேய்த்து அவன், தனது பசுமையான வாய்களால் ஸோம தாள்களை தின்கிறான். ௩ கருடர்கள் தங்கள் கானத்தை சோதியில் முழக்கஞ் செய்துள்ளார்கள்;—சோதி—சயனத்தில்—சூரியனில்—கருஞ் சீவர்கள் நடனஞ் செய்துள்ளார்கள். சூரியாசிரிதமானவர்கள் அடிக்கல்லைப் பரிகாரஞ் செய்ய கீழே வருங்கால் அதி இரேதஸை தரித்துள்ளார்கள். [சு. சகூ. க—ரு.]

௨௨௩ தானியம் [அபயகாம அதர்வன்—அசுவினிகள்]

க அசுவினிகளே! எசியை ஸமங்கத்தை துளைப்பானை யழி: அவற்றின் சிரத்தைச் சேதி: தசைகளை தேய்த்துவிடு; அவை யவத்தைப் புசிக்கலாம்; அவற்றின் வாயை யடை; தானியத்துக்கு பயமின்மையைச் செய். உ

உகக கருத்து—தூக்கமே மரணமாகும்.

௨௨௦ கருத்து—நாங்கள் ஒருமையுடன் புசித்து ஓங்குமாயுசுடன் வாழ வேண்டும்.



1 கீழ்வாயை 2 மேற்வாயை.

௨௨க கருத்து—மானிடரின் முதல் உச வருடங்கள் காயத்திரீச் சந்தம். அடுத்த சஅ வருஷங்கள் ஜகதீச் சந்தம், பிறகு சச வருஷங்கள் திருஷ்டுபுச் சந்தமெனப்படும்.

௨௨௨ கருத்து—அழிக்கு மனல்.

துளைப்பே! வெட்டுக்கிளியே! அழைப்பவனே! உபக்வசமே பூர்த்தியாகாத அவியை பிராமணன்போல், இந்த யவ—த்தினையை—தின்னாமல் துன்பஞ் செய்யாமல் சென்றுவிடு. ௩ துளைபதியே, வசுபதியே, கூறிய வாய்களுடன் எனக்குச் செவிகொடு; நாங்கள் விழுங்குபைவயான உங்களை வனச் சேர்க்கையான விழுங்குபவற்றையெல்லாம் அரைத்து விடுகிறோம். [௬. ௫௦. ௧—௩]

௨௨௪ வாயு [சந்தாதி—ஆபன் க. வருணன்]

௧ வாயுவின் பவித்திரத்தால் புனிதமாகி ஸோமன் எதிர்த்துப் பாய்ந்தோடியுள்ளான்; அவன் இந்திரனுடைய இணங்கிய நண்பனாவான். ௨ தாய்மார்களான சலங்கள் எங்களை விருத்தியாக்கட்டும்; நெய்யால் சுத்தஞ் செய்பவர்கள் எங்களை நெய்யால் சுத்தஞ் செய்க: தேவிகள் எல்லாத் தீமைகளைச் சுமந்து செல்வதால், நான் சலங்களினின்று சுசியாயும் சுத்தமாயும் வருகிறேன். ௩ வருணனே! தேவ சனங்களுக்கு விரோதமாய் மனிதர்கள் இங்கு செய்வதையெல்லாம்—நாங்கள் செய்த சிந்தனையின்மையில் உனது தர்மங்களை பங்கஞ் செய்தால், தேவனே! அத்தீமைக்காக எங்களைத் துன்பஞ் செய்ய வேண்டாம். [௬. ௫௧. ௧—௩]

௨௨௫ சூரியன் [பாகலி—வெகுதேவர்கள்]

௧ இராட்சதர்களை எதிரில் அழிப்பவனாய் சூரியன் சோதியினின்று உச்சி செல்லுகிறான்; ஆதித்தியனான அவன் அனைவராலுங் காணப்படுபவன், மலைகளினின்று காணாததையெல்லாம் மாய்ப்பவன். ௨ பசுக்கள் கோ

௨௨௩ கருத்து—தானியத்தைப் பாலனஞ் செய்.

௨௨௪ கருத்து—வருணனை மன்னிப்புக் கேளுங்கள்.



சாலைகளில் சாய்ந்துள்ளன. அடவி மிருகங்கள் அமைதியை யடைந்துள்ளன; நதிகளின் அலைகள் மறைந்து, காணாமலாகியுள்ளன. ௩ ஆயுஸளிப்பதாயும் அறிவுமயமுமாய் விசுவ சிகிச்சையுமான கண்வனது கீர்த்தி வாய்ந்த செடியை நான் கொண்டுவந்துள்ளேன்: அது இவனுடைய காணாத—கெடுதல்களை—கழித்திடுக. [௬. ௫௨. ௧—௩]

௨௨௬ வேண்டுகோள் [பிருஹத் சுக்கிரம்—காணாதைவதம்]

௧ அறிஞர்களான சோதியும் புவியும், சுக்கிரனான பெரியவனும் தட்சிணையால் இதை இரட்சிப்பார்களாக; சுவதாவும் அக்கினியும் ஸோமனும்—எனக்கு—அநுகூலஞ்செய்வார்களாக; வாயுவும் ஸவிதாவும் பகனும் எங்களை இரட்சிப்பார்களாக. ௨ மறுபடியும் பிராணன், மறுபடியும் ஆத்மா எங்களுக்கு வருக: மறுபடியும் கண் மறுபடியும் பிராணன் எங்களுக்கு வருக: இம்மையற்றான வைசுவாநரன் எல்லாக் கஷ்டங்களின் நடுவே நிற்பானாக. ௩ நாங்கள் வர்சஸோடும் பாலோடும் சேர்ந்துள்ளோம்; தேகங்களோடும் மங்களமான மனத்துடனும் சேர்ந்துள்ளோம்; துவஷ்டா இங்கு விரியும் நிலயத்தைச் செய்க: அவன் தேகத்தில் துன்பமாவதைத் தண்மை செய்க. [௬. ௫௩. ௧—௩.]

௨௨௭ இந்திரன் [பிரம்மா—அக்கினி ஷோமயம்]

௧ நான் இங்கு அந்த உத்தம இந்திரனை இணைக்கிறேன், விர்த்திக்காக அவனை யலங்காரஞ்செய்கிறேன்! மழைப் புல்லைப் போல அவனுடைய க்ஷத்திரம் மேன்மையான

௨௨௫ கருத்து—காணாத கெடுதல்களையும் நீக்கு.

௨௨௬ கருத்து—நாங்கள் மங்களமான மனத்துடன் சேர்ந்துள்ளோம்

ஸ்ரீயை விருத்தியாக்கு. ௨. அக்கினியே! ஸோமனே! அவனுக்கு க்ஷத்திரத்தை அவனுக்கு செல்வத்தை தரியுங்கள், இராஷ்டிர மண்டலத்தில் அவனது கூட்டத்துக் கதிகமாய் அவனை உயரமாக்குங்கள்: ௩. பந்துவானும் அபந்துவானும் சரி எங்களை எதிர்க்கும் ஒவ்வொருவனையும் ஸோமனைப் பொழிபவனும் யஜமானனுமுள்ள எனக்குக் கீழாக்கு. [௬. ௫௪. ௧—௩.]

௨௨௮ ஆக்ஞை [பிரும்மா—௧, விசுவே தேவர்கள் ௨—௩ ருத்திரன்]

௧ சோதி புவி நடுவே திகழும், தேவர்களால் செல்லப்படும் வழிகளில் எது அழியாமைக்கு எடுத்துச் செல்லுமோ அதற்கு, தேவர்களே நீங்கள் எல்லீரும் இங்கு என்னை யளித்து விடுங்கள். ௨ கிரீஷ்மம் ஏமந்தம் சிசிரம் வஸந்தம், சரத்து, மழைகளே! நீங்கள் எங்களை சுகத்திலாக்குங்கள், பசுக்களில் பிரஜைகளில் எங்களுக்குப் பாகமளியுங்கள்; நாங்கள் உங்களுடைய காற்று சூனிய காப்பிலாக வேண்டும். ௩ இதாவத்ஸரத்துக்கு, பரிவத்ஸரத்துக்கு, ஸம்வத்சரத்துக்கு பெரிய நமஸ்காரத்தைச் செய்யுங்கள்; இந்த யக்ஞார்கர்களுடைய நல்நினைவில் நாங்களாகவேண்டும்; அப்படியே அவர்களுடைய மங்களமான நல்மனத்தில்—நாங்களாகவேண்டும். [௬. ௫௫. ௧—௩.]

௨௨௯ சர்ப்பங்கள் [சந்தாதி—விசுவேதேவர்கள் ௨—௩. ருத்திரன்]

௧ தேவர்களே பாம்பு எங்களை எங்களது பிரஜைகளுடன், எங்களது புருஷர்களுடன் கொல்லாமலாகுக:

௨௨௭ கருத்து—அனைவரும் என் கீழாகுக.

௨௨௮ கருத்து — ருதுக்களுடனும் வருஷங்களுடனும் ஒன்று சேர்ந்து வாழுங்கள்.



ஒன்று மூடியுள்ளதை அது திறக்காமலாகுக: திறந்துள்ளதை அது ஒன்று மூடாமலிருக்குக; தேவசனங்களுக்கு நமஸ்காரம். ௨ கருமைக்கு வணக்கமாகுக, குறுக்கு விரியனுக்கு வணக்கம், பழுப்புப் பாம்புக்கு வணக்கம்; தேவசனங்களுக்கு வணக்கம். ௩ பாம்பே பல்லினால் உனது பற்களை ஒன்றழிக்கிறேன்; தாடையினால் உனது தாடையை ஒன்றழிக்கிறேன் நாக்கினால் உன் நாக்கை ஒன்றழிக்கிறேன்; வாயினால் உனது வாயை ஒன்றழிக்கிறேன். [௬. ௫௬ ௧—௩.]

௨௩௦ மருந்து [சந்தாதி—௧—௨ ருத்திரன் ௩—!]

௧ இதுதான் மருந்தாகும்; இது ருத்திரனுடைய மருந்தாகும்; இதனால் ஒருவன், நூறு கூழுகளுள்ள கணையை தூரமாக்கலாம். ௨ ஜாலாஷத்தால்—அதைச்—நனையுங்கள். ஜாலாஷத்தால்—அதில்—பொழியுங்கள்; ஜாலாஷம் உக்கிரமான மருந்தாகும்; அதனால் எங்கள் சீவனுக்குச் சுகமளியுங்கள். ௩ எங்களுக்குச் சுகமும் இன்பமாகுக: எங்களை எந்—நோயும்—வேதனை செய்யாமலாகுக; எங்கள்நோய் வசமாகுக; எல்லாம் எங்களுக்கு மருந்தாகுக: சர்வமும் எங்களுக்கு மருந்தாகுக. [௬. ௫௭. ௧—௩.]

௨௩௧ புகழ் [யசஸ்காம அதர்வன்—மந்திரோகத தேவதையும் பிருகஸ்பதியும்]

௧ மகவானான இந்திரன் என்னைப் புகழுள்ளவனாய்ச் செய்க: இங்கு புவியும் ஜோதியுமான இரண்டும் என்னைப் புகழுள்ளவனாய்ச் செய்வார்களாக. என்னைத் தேவ ஸவிதா புகழுள்ளவனாய்ச் செய்க: நான் தட்சிணை யளிப்பவனுக்கு

௨௨௯ கருத்து—பாம்புக்கு வணக்கமென்பது அதை யழிப்பதாகும்.

௨௩௦ கருத்து—எல்லாம் எங்களுக்கு மருந்தாகட்டும்

இங்கு பிரியமாவேனாக. உ சோதியில் புவியில் இந்திரன் புகழுடனிருப்பதுபோல், ஓஷதிகளில் சலங்கள் புகழுடனிருப்பனபோல், அப்படியே எல்லா தேவர்களில் ஸர்வங்களில் நாங்கள் புகழுள்ளவர்களாக வேண்டும். ங புகழுள்ளவன் இந்திரன் புகழுள்ளவன் அக்கினி, புகழுள்ளவனாய் ஸோமன் புலனாகிறான்; நான் எல்லாப் பொருள்களிலும் புகழுள்ளவனாய் அதிப் புகழுள்ளவனாயுள்ளேன். [சு. ருஅ. க—ங]

உகஉ பசுச் செல்வம் [அதர்வன்—ருத்திரம் உத மந்திரோக்த தேவதை]

க அருந்ததியே[1] ! நீ முதன்மையாய் சுமைக் காளைகளுக்கு நீ பால்சுரனிய பசுவுக்கு நாற்கால் பிராணிகளுக்கு, சிறு பசுவுக்குக் காப்பை யளி. உ ஔஷதி அருந்ததி தேவிகளுடன் சேர்ந்து காப்பை யளிக்கட்டும்; அது கோசாலையைப் பால் மிகச்செய்து புருஷர்களை யக்ஷ்மத்தினின்று நீக்குக. ங நான் விசுவரூபமாய் ஸூபகையாய் சிவனளிப்பவையை போற்றுகிறேன்; அவள் ருத்திரனுடைய ஆயுதத்தை எங்கள் பசுக்களினின்று தூரமாக்குவாளாக. [சு. ருக. க—ங.]

உகங விவாஹம் [அதர்வன்—அர்யமான்]

க இங்கு அரியமான் முன்பக்கம் நழுவிய—கேசக் கதிர்களுடன் இந்தக் கன்னிகைக்குப் பதியைத்தேடி தாரமிழந்தவனுக்கு மனைவியை, நாடி, வருகிறான். உ அரியமானே! வேறு பெண்கள், சபைக்குச் செல்லும் இந்தப் பெண்மணி சிரமப்பட்டுள்ளாள்; அரியமானே இனி அந்நிய ஸ்திரீ அவளது சபைக்கு வருவாள். ங தாத்ரு தாணியைத் தாங்குகிறான். தாத்ரு சோதியையும் சூரியனையுந் தாங்குகிறான்; இக்கன்னிகைக்கு அவன் இஷ்டம்போல் பதியைத் தருக. [சு. சுO க—ங]

1 ஒரு மூலிகை பெயர்.

உகக கருத்து—நான் எல்லாப் பொருள்களிலும் புகழுள்ளவனாக வேண்டும்.

உகஉ , கருத்து—மிருக வைத்தியமும் அவசியமானது.



உகச நான் [அதர்வன்—ருத்திரன்]

க சலங்கள் எனக்கு இனிமையாயுள்ளதை இசைத்திடுக: சூரான் ஜோதிக்காக எனக்குச் சுமந்துள்ளான். எனக்கு தேவர்களும் தபத்தில் தோன்றுபவர்களும், தேவஸவிதாவும் வியாபகத்தை யளித்திடுக. உ நான் ஜோதியையும் புவியையும் விரித்தேன்: நான் ஏழு ருதுக்களை ஒருமையுடன் ஜனனஞ் செய்தேன்; நான் சத்தியம் அசத்தியம் எது என்பதைச் சொல்லுகிறேன்; நான் ஜனங்களையும் திவ்யமான சொல்லையுஞ் சூழ்கிறேன். ங நான் ஜோதியையும் புவியையுஞ் ஜனனஞ் செய்தேன்: நான் ருதுக்களையும் ஜனனஞ் செய்தேன்; அக்கினி ஸோமர்களை நண்பர்களாக யநுபவிக்கும் நான் சத்தியம் அசத்தியம் எது என்பதைச் சொல்லுகிறேன். [சு. சுக. க—ங]

உகரு வைசுவாநரன் [அதர்வான்—ருத்திர உதமந்திரோகத் தேவதை.

க வைசுவாநரன் தனது இரசிமிகளால் எங்களைச் சுத்தஞ் செய்க: பிரேரிதஞ் செய்யும் வாயு பிராணனாலும் மேகங்களாலும் எங்களைச் சுத்தஞ் செய்க: பால்மிகுந்த

உகங கருத்து—கன்னிகைக்குக் கருத்துக்கிசைந்த கணவன் வேண்டும்.

உகச கருத்து—நான் சத்தியம் அசத்தியம் எது என்பதைச் சொல்லுகிறேன்.

பொருந்தி யக்ஞாகர்களான ஜோதியும் புவியும் பாவினால் எங்களைச் சுத்தஞ் செய்வார்களாக. ௨ வைசுவாநரியின் ஸூந்ருதையை தரியுங்கள்; அவனுடைய தேகங்கள் சீரிய செழுமைகளுடனான திசைகளாகும்; அவனுடன் இணைந்த இன்பங்களில் இசைந்து நாங்கள் செல்வபதிகளாகவேண்டும். ௩ நீங்கள் சுத்தர்களாகி சுசியுடன் செம்மைசெய்பவர்களாகி வன்மைக்காக வைசுவாநரியில் தரியுங்கள்; இங்கு இடையுடன் இணைந்த இன்பத்தில் இன்பமாகி சூரியன் உச்சி செல்வதை நாங்கள் வெகு காலம் பார்க்கவேண்டும். [௬. ௬௨. ௧—௩]

௨௧௬ நிர்ருதியே [துருஹணம்—௧—௩ நிர்ருதி. ௪—அக்கினி]

௧ உன்னுடைய கழுத்தில் திவ்யமான நிர்ருதி கட்டியுள்ள கட்டை, அவிழ்க்க முடியாமலுள்ள அதை நான் உனக்கு நீண்ட ஆயுசுக்கு வன்மைக்கு வலிமைக்கு விலக்குகிறேன்; நீ துரிதமாகி துன்பமில்லாத உணவைப் புசி. ௨ நிர்ருதியே கூரிய தேஜசுடனான உனக்கு வணக்கமாகட்டும்; நீ இரும்பின் பந்தபாசங்களைப் பிரி: யமன் மறுபடியும் உன்னை எனக்களிக்கிறான்; அந்த யமனுக்கு அந்த மிருத்யுவுக்கு வணக்கமாகுக. ௩ ஆயிர மரணங்களுடன் இணைக்கப்பட்டு இரும்புக் கம்பத்துக்கு நீ கட்டப்பட்டுள்ளாய்; நீ யமனுடன் பிதுருக்களுடன் ஒன்றுசேர்ந்து, இவனை உயரிய உலகத்துக்கு எழுச்சியாக்கு. ௪ விருஷபனான அக்கினியே எதிரியினின்று எல்லாப் பொருள்களையும் ஒன்று குவிக்கிறாய்; யக்ஞவழியில் நீ எழுச்சியாக்கப் படுகிறாய்; நீ எங்களுக்குச் செல்வங்களை கொண்டுவா. [௬. ௬௩. ௧—௩]

௨௧௫ கருத்து—நாங்கள் செல்வபதிகளாக வேண்டும்.

௨௧௬ கருத்து--அழிவை நாடி அளிப்பைப் பெறு.



௨௧௭ ஐக்கியம் [அதர்வான்—ஸாம்மனஸ்யம்]

௧ இசைந்து இணக்கமாகுங்கள். எப்படி பழைய தேவர்கள் இசைந்து தங்கள் பாகத்தை பற்றினார்களோ, அப்படியே உங்கள் மனம் ஒருமையுடனாகட்டும். ௨ அவர்களது மந்திரம் சமானமாகும், சபை சமானமாகும், விரதம் சமானமாகும், சித்தம் ஒன்று—சேரும்; நான் உங்களுக்கு சமான அவியால் யஜிக்கிறேன்; நீங்கள் சமான சித்தத்தில் ஒன்று நுழையுங்கள். ௩ உங்கள் சங்கற்பம் சமானமாகட்டும், உங்கள் இருதயங்கள் சமானமாகட்டும்: நீங்கள் ஒன்றுசேர்ந்து உத்தமமாக உங்கள் மனம் சமானமாகுக. [௬. ௬௪. ௧—௩]

௨௧௮ துண்டமாக்கு [அதர்வன்—சந்திர உத இந்திரன் பராசரன்]

௧ கோபங் கீழாகட்டும், எழும்—ஆயுதம்—கீழாகட்டும், மனமிணையும் கைகள் இரண்டுங் கீழாகட்டும்: பராசரனே[1]! அவர்களின் பலத்தை யொழித்துவிடு; அப்பால் எங்களுக்குச் செல்வத்தைச் செய். ௨ தேவர்களே! கைகளற்றவர்களில் நீங்கள் எறியும் கைகளற்றதனை—யான—இந்த அவியால் நான் எதிரிகளின் கைகளை நான் துண்டம் துண்டமாக்குகிறேன். ௩ இந்திரன் அசுரர்களுக்கு கைகளற்றதைச் செய்தான்; எனது வீரர்கள் நிலையான நண்பனான இந்திரனால் ஜயிப்பார்களாக. [௬. ௬௫. ௧—௩]

1 அழிப்பவனே;

௨௧௭ கருத்து—ஒரு எண்ணம் ஒரு கருத்து ஒரு நோக்கமுடனிருங்கள்.

௨௧௮ கருத்து—மாற்றார்களை மிதித்து விடு.

உகக எதிரிகள் [அதர்வன்—சந்திர உத இந்திர தேவதை]

க எதிர்க்கும் எதிரி கைகளற்றுருக: எங்களைப் போர் புரிய படைகளுடன் வரும்—பகைவர்கள் கைகளற்றுவார்களாக: இந்திரனே! மேலான ஆயுதத்தோடு அவர்களை மோதச்செய்; அவர்களுடைய அகாத புருடன் துன்பமாகி ஓடுவானாக. உ எதிரிகளே நாண் ஏற்றி, அம்பு—இழுத்து எய்பவர்களான நீங்கள் கைகளற்றவர்கள்; இந்திரன் இப்பொழுது உங்களைக் கொன்றுள்ளான். ௩ எதிரிகள் கைகளன்னியி லாகட்டும். நாங்கள் அவர்களுடைய அங்கங்களை ஆயாச மாக்குகிறோம்; இந்திரனே இனி அவர்களுடைய ஐசுவரியங்களை நமக்குள் நூறு வகையாய் பிரித்துக் கொள்வோம். [கூ. கூகூ. க—௩]

உசO அச்சமுண்டாக்கு [அதர்வான்—சந்திர உத இந்திரன்]

க எங்கும் வழிகளில் இந்திரனும் பூஷணனும் சென்றுள்ளான்; இன்று அங்குள்ள சேரார் சேனைகள் வெகு தூரத்திலேயே கலங்கிடுக. உ எதிரிகளே! தலைகளில்லாப் பாம்புகள் போல் மதிமயங்கிச் செல்லுங்கள்; அக்கினியால் அறிவீனமான அங்குள்ள உங்களுடைய உயரிய ஒவ்வொருவனையும் இந்திரன் ஒழிப்பானாக. ௩ அவர்களில் சர்மத்லை விருஷபம் போல சுற்றிக் கட்டு; அரிணத்தின் அச்சத்தை யுண்டாக்கு; எதிரிகள் தூரமோடுக; பசு எங்களுக்கு இங்கு துரிதமாகுக. [கூ. கூஎ. க—௩]

---

உகக கருத்து—ஐசுவரியங்களை நமக்குள் நூறு வகையாய் பிரித்துக் கொள்வோம்.

உசO கருத்து—அரியை அனலால் அறிவீனமாக்கு.



உசக கேசம் [அதர்வான்—மந்திரோக்த தேவதை]

க இங்கு ஸவிதா க்ஷுரத்தோடு வந்துள்ளான்; வாயுவே! உஷ்ணோதகத்துடன்[1] வா; வசுக்கள் ருத்திரர்கள் ஆதித்தியர்கள் ஒருமையுடன் ஈரமாக்கட்டும்; அறிவுடனுள்ள நீங்கள் ஸோம இராஜனுடைய—சிரகேசத்தை—நீக்குங்கள். உ அதிதி தாடியை நீக்கச் செய்க: சலங்கள் சக்தியால் அதை—நனைத்திடுக: பிராஜாபதி கண்ணுக்கு தீர்க்காயுசுக்கு அதைச் சிகிச்சை செய்திடுக. ௩ அறியும் ஸவிதா எந்த க்ஷுரக் கத்தியால் சோமன் வருணனுடைய—சிர ரோமத்தை—நீக்குவானோ, பிராமணர்களே அதனால்—இவனுடைய—சிரகேசத்தை—நீக்குங்கள். அவன் பசு பரி பிரஜை மிகுபவனாகுக. [கூ. கூஅ. க—௩]

உசஉ புகழ் [வர்சஸ்காம யசஸ்காம அதர்வான்—பிருஹஸ்பதி உத அசுவினிகள்]

க மலைகளில், இரதங்களில்—அரகராடங்களில்—பொன்னில் பசுக்களில் எந்தப் புகழுண்டோ அமிருதத்தில், பொழியும் சுரத்தில் எந்தத் தேனுண்டோ அது எனக்காகுக. உ அசுவினிகளே! சுபபதிகளே! சனங்களில் நான் சீரிய சொற்களைச் சொல்ல உங்களுடைய இனிய தேனால் என்னை நனையுங்கள். ௩ பிரஜாபதி, சோதியில் ஒளியைப்போல் கிலையாய் என்னில் பலத்தை இன்னும் புகழை, அப்பால் யக்ஞத்தின் சக்தியை ஸ்தாபிப்பானாக. [கூ. கூகூ. க—௩]

---

1 சூடான சலத்துடன்

உசக கருத்து—கேசம், ரேசமம் என்பன மாசு அல்லது மரண சின்னங்களைக் குறிக்கும்.

உசஉ கருத்து—எனக்குத் தேனும் புகழும் வேண்டும்

௨௪௩. தாய்மார்களே! [காங்காயனன்—அகன்யன்]

௧ மாமிசம்போல், சுரைபோல் ஆட்டப் பலகையில் காய்போல பலமுள்ள புருஷனுடைய மனம் ஸ்திரீயில் ஸ்தாபனமாவதுபோல்—உனது கருத்து இம்சையாகாதவளே ! உனது கன்றில்[1] பந்தமாகுக. ௨ யானை பெண் யானையின் பாதத்தை பாதத்தாலநுசரிப்பதுபோல் பலமுள்ள புருஷனுடைய மனம் ஸ்திரீயில் ஸ்தாபனமாவதுபோல்—பந்தமாகுக. ௩ பரிதிபோல் உபாதிபோல் பரிதியின் நடுப்பாகம்போல் பலமுள்ள புருஷனுடைய மனம் ஸ்திரீயில் ஸ்தாபனமாவதுபோல பந்தமாகுக. [௬. ௭௦. ௧—௩.]

௨௪௪ உணவு [பிரம்மா—௧—௨. அக்கினி. ௩. விசுவே தேவர்கள்]

௧. நான் வெகுமுறை உண்ணும் வெகு பல உணவையும் நான் பிரதி கிரஹித்துள்ள[2] பொன்னையும் புரவியையும் பசுவையும் அஜத்தையும் ஆட்டையும் எதனையும் ஹோதாவான அக்கினி நல்ல அவியாகச் செய்க. ௨ பிதுருக்களால் அளிக்கப்பட்டு மானிடர்களால் அநுமதியாகி, என்னை அடையும் அடையாததுமான, உணவை, எதனால் எனது மனம் மகிழ்வுடனுகின்றதோ அந்த உணவை ஹோதாவான அக்கினி நல்ல அவியாகச் செய்க. ௩. தேவர்களே ! எந்த உணவை அளிக்கவோ அளிக்காமலிருக்கவோ நான் வாக்களித்து அநீதியாய் உண்கிறேனோ, அந்த உணவை மகத்தான வைசுவாநரன் இனிமையாயும் மங்களமாயுஞ் செய்க. [௬. ௭௧. ௧—௩.]

1 குழந்தையிலே. 2 பெற்றுள்ள.

௨௪௩. கருத்து—பாலர்களைப் போற்றுங்கள்.

௨௪௪ கருத்து—உயரிய உணவைப் புசியுங்கள்.



௨௪௫ வீரியம் [அதர்வாங்கிரஸன்—சேபோ அர்க்கன்]

௧. எப்படிக் கரும்பாம்பு—அடக்கமநுசரித்து, அசுரனுடைய மாயையால், அதிசய காயங்களைச் செய்து விசாலமாகின்றதோ அப்படியே இந்த அர்க்கம் உனது ஜனனங்கத்தை அங்கத்தோடங்கமாய் சடிதியாய் நன்கு பொருந்தச் செய்க. ௨ எப்படி சனனுங்கம் வாதத்தினால் ஸ்தூலமாகி உற்பத்திமூலத்தை — யநுசரிக்குங்கால் — பரஸ்வன்தினுடைய அங்கம் எத்தனை பெரியதாகுமோ அத்தனை பெரியதாய் உனது அங்கம் ஒங்குக. ௩ பாரஸ்வத்தினுடைய அங்கம் எத்தனையாகுமோ, யானை, கழுதையினுடைய—அங்கங்கள் எத்தனையாகுமோ துரிதகுதிரையினுடைய அங்கம்போல் அத்தனை பெரியதாய்—உனது அங்கம் வளர்க: [௬. ௭௨. ௧—௩]

௨௪௬ தேவர்களே ! [அதர்வான்—ஸாம் மனஸ்யமுத—மந்திரோக்த காறு தேவர்கள்]

௧. இங்கு வருணன் வருக: ஸோமனும் அக்கினியும்—வருக. வசுக்களோடு பிருஹஸ்பதி இங்கு வருக, சகோதரர்களே ! நீங்கள் எல்லீரும் ஒரே மனமுடன் உக்கிர ஒழுக்கஞ்செய்பவனுடைய செல்வத்துக்கு ஒருமையுடன் வாருங்கள். ௨ உங்கள் இருதயங்களிலுள்ள வலிமையை உங்கள் மனத்தில் நுழையும் சங்கற்பத்தை நெய்யினுலும் அவியானுலும் நான் விலக்குகிறேன் ; சகோதரர்களே ! உங்கள் இன்பம் என்னிலாகுக: ௩ நீங்கள் இங்கு தானுருங்கள். எங்களிடமிருந்து தூரஞ்செல்ல வேண்டாம்; பூஷன் தூரத்தில் உங்களுக்கு வழி சூனியஞ்செய்க : வாஸ்தோஷ்பதி உங்களை யநுசரித்து முழக்கமுடனழைத்

௨௪௫ கருத்து—நீ வளர்ந்தோங்கு.

திடுக: சகோதரர்களே! என்னில் உங்கள் இன்பமாகுக. [௬. ௭௩. ௧—௩.]

௨௪௭ ஒருமை [அதர்வான்—ஸாம்மனஸ்யம்]

௧. உங்களது காயங்கள் ஒன்று குவிக; உங்கள் மனங்கள் ஒன்றாகி உங்களுடைய விரதங்கள் ஒருமையுடனாகுக; இந்த பிரமணஸ்பதி ஒருமையுடன் உங்களை, பகன் ஒருமையுடன் உங்களை வரச் செய்துள்ளான். ௨. உங்கள் மன இணக்கத்தையும், உங்கள் இருதய இணக்கத்தையும் பகனுடைய பரிசிரமத்தையும்—நான் செய்துள்ளேன்; அதனால் உங்களை நான் இணக்கமாக்குகிறேன். ௩. உக்கிரமாய் பகைமை வகிக்காமல் எப்படி ஆதித்தியர்கள் வசுக்கள் மருத்துக்களுடன் சேர்ந்துள்ளார்களோ அப்படியே, மூந்நாமமுள்ளவனே![1] பகைமை வகிக்காமல் இந்த சனங்களை நீ இங்கு ஒருமையுடனாக்கு. [௬. ௭௪. ௧—௩.]

௨௪௮ துரத்து [ஸபத்ன க்ஷய காம கபந்தன்—மந்திரோக்த இந்திரன்]

௧. எங்களை எதிர்த்து எதிரியாயுள்ள அம்—மனிதனை, மனையினின்றும் நான் துரத்துகிறேன்; இந்திரன் வேதனை சூனிய வெளிதூரத்தும் அடியால் அவனை அழித்துள்ளான். ௨. அவன் இடையறா வருடங்கள் மறுபடியும் வாராமலிருக்க, விருத்திர னழிக்கும் இந்திரன் அவனை அதி வெகு தூரந்தூரத்தவனாகுக. ௩. அவன் மூன்று தூரங்களுக் கப்பால் செல்க; அவன் ஐந்து சனங்களுக்

1 முக்குணமுள்ளவனே!

௨௪௬ கருத்து—சகல சனங்களும் என்னில் இன்பத்தைக் காண வேண்டும்.

௨௪௭ கருத்து—எல்லா சனங்களும் ஏக சித்தர்களாகவேண்டும்.



கப்பால் செல்க; சூரியன் சோதியிலிருக்கும் வரை அநந்த வருஷங்கள் அவன் அங்கிருந்து திரும்பி வாராமலிருக்க மூன்று சோதிகளுக் கப்பால் செல்க. [௬. ௭௫. ௧—௩]

௨௪௯ அக்கினி [கபந்தன்—ஸாந்தபன் அக்கினி]

௧ சுடரைக் காண சமித்தைச்—சேர்த்து அவனைச் சுற்றி அமர்ந்துள்ளவர்களுக்கு அவர்களது இருதயத்தினின்றே, எழுச்சியாக்கப்படும் அக்கினி தன் நாக்களோடு உச்சமாவானாக. ௨ எரிக்கும்—அக்கினியின் பதத்தை நான் ஆயுசுக்காகப் பற்றுகிறேன்; அறிஞன்—வாயினின்றும் தோன்றும் அவனுடைய புகையைப் பார்க்கிறான், ௩. எவன் க்ஷத்திரியனால் சேர்க்கப்படும் அக்கினியின் ஸமித்தை யறிகிறானோ, அதன் மிருத்யுவின் இறக்கத்தில் பாதத்தை வைப்பதில்லை. ௪ அவனைச் சூழ்பவர்கள் அவனை அழிப்பதில்லை; அவன் அழிவுக்குச் செல்வதில்லை; அறியும் க்ஷத்திரியன் ஆயுசுக்காக அக்கினியின் நாமத்தை ஜெபிக்கிறான். [௬. ௭௬. ௧—௩]

௨௫௦ நிலை [கபந்தன்—ஜாதவேதன்]

௧ சோதி நிலையாயுள்ளது; பூமி நிலையாயுள்ளது; இந்த விசுவமான ஜகம் நிலையாயுள்ளது; மலைகள் மூலத்தில் நிலையாயுள்ளன; நான் குதிரைகளை கொட்டத்தில் நிலைக்கச் செய்துள்ளேன். ௨ போகும் நிலயத்தைப் பற்றியவனும், வரும் நிலயத்தைப் பற்றுபவனுமான கோபனை நான் அழைக்கிறேன். ௩ ஜாதவேதசனே! உனது சத வழிகளை இங்கிருப்பு. உனக்கு ஆயிரம் வழிகளுண்டு,

௨௪௮ கருத்து—தெவ்வர்களைத் துரத்து.

௨௪௯ கருத்து—சக்தி புருஷன் ஆயுசுக்குச் சுடரைப் பற்றுகிறான்.

அவற்ருல் எங்களை மறுபடியும் அடையச் செய் [சூ. எஎ. க—ச]

உ௱ கருத்து—திரகிலே என்பது தேவ கிலே.

உ௱க பெருகு, பெருக்கு. [அதர்வான்—சந்திரமாஸ் துவஷ்டா]

க இங்கிகழும் அவியிஞல் இவன் மறுபடியும் பூரணமாக்கப் படட்டும்; அவனுக்குக் கொண்டுவரப்பட்டுள்ள மனைவியை அவன் இரசத்தால் பெருகச் செய்க. உ அவளைப் ப்ராணஞல் அபிவிருத்தி செய்க; இராஷ்டிரத்தால் அபிவிருத்தி செய்க. ஆயிரஞ் சக்திகளுடனுருஞ் செல்வத்தில் இவர்கள் சாசுவதமாவார்களாக. ங துவஷ்டா மனைவியை சனனஞ் செய்தான்; துவஷ்டா இவளுக்கு பதியானஉன்னைச் சனனஞ் செய்தான்; துவஷ்டா உங்களுக்கு தீர்க்காயுளையும் ஆயிரமாயுசையும் மக்கட்களையுஞ் செய்க. [சூ. எஅ. க—ங]

உ௱உ புஷ்டி [அதர்வான்—ஸம்ஸ்பானம்]

க இங்கு புஷ்டி யளிக்கும் மேகபதி எங்களைப் பாது காப்பர்ஞக. எங்கள் வீடுகளில் ஒப்பற்றவைகளை—உதவி செய்க. உ மேகபதியே! நீ எங்கள் வீடுகளில் பலத்தை ஸ்தாபி, புஷ்டி வருக. பொருள் வருக. ங தேவனே! புஷ்டி யளிப்பவனே! நீ ஆயிரம் போஷணைகளின் அதிபதி, அதை எங்களுக்கு அளி, அதை எங்களுக்குக் கொடு; உன்னிடமிருந்து அவற்றிற்கு நாங்கள் பாகஸ்தர்களாவோமாக. [சூ. எகூ. க—ங]

உ௱-உ௱க கருத்து—நீயும் உன் மனைவியும் ஒங்குங்கள்.
உ௱உ கருத்து—மனையிலே எல்லா இன்பங்களும் வேண்டும்.



உ௱ங காலசஞ்சர்கள் [அதர்வான்—சந்திரபான்]

க விசுவமான பொருள்களை யெல்லாம் ஏற்பார்த்து அவன் வானத்தில் பறக்கிருன்; திவ்யமான நாயின்[1] மேன்மை எது உண்டோ அதனுல் நாங்கள் உன்னை உபாசிக்கிறோம். உ தேவர்களைப்போல் சோதியில் ஸ்தாபனஞ் செய்யப்பட்டுள்ள மூன்று காலகாஞ்சைகளை[2] இம் மனிதனது இன்னல் இன்மைக்காக உதவிக் கழைக்கிறேன். ங சலங்களில் உனது சனனம். சோதி உனது ஸ்தானம். புவியிலும் கடலிலும் உனது மகிமை. திவ்ய நாயின் மகிமையான அவியிஞல் நாங்கள் உன்னை உபாசிக்கிறோம். [சூ. அ௦. க—ங]

உ௱ச மான் [துவஷ்டா—மந்திரோக்த உத ஆதித்தியன்]

க நீ சுவாதீனன். இரு கைகளைப் பற்றியுள்ளவன்; நீ அரக்கர்களை அகற்றுகிருய்; பிரஜையையும் பொருளையும் பற்றி இது கைப்பிடிப் பாயிற்று. உ கைப்பிடிப்பே! கருவின் ஸ்தாபனத்துக்காக மூலஸ்தாபனத்தை நலமாய்த் தரி. எல்லையி சிருப்பவளே! மகனை யளி. வருபவளே! நீ அவனை வரச்செய். ங மகனை விரும்பி அதிதி எந்தக் கைப்பிடிப்பைப் பற்றினுளோ! அனதத் துவஷ்டாவானவன் அவள் மகனை ஜனனஞ் செய்க, எனச் சொல்லி அவளுக்கு அதை பந்தஞ் செய்க. [சூ. அக. க—ங]

உ௱ரு மனைவி [ஜாயாகாமோ பகன்—இந்திரன்]

க வந்தவள் வருபவள் வருகின்றவளது நாமத்தை நான் கிரகிக்கிறேன்; விருத்திரனழிக்கும் நூறு வய வசுக்களது

1 ஆத்மாவின துருவ நட்சத்திரத்தின் 2 மிருகசிர்ஷதாரகங்களை
உ௱ங கருத்து—வானசாஸ்திர மறியுங்கள்.
உ௱ச கருத்து—சுகப் பிரசவமளி.

இந்திரனை நான் விரும்புகிறேன். உ ஸவிதாவின் பெண்ணான சூரியையை அசுவினிகள் எந்த வழியால் வகித்துச் சென்றார்களோ அந்த வழியால் நீ மனைவியைக் கொண்டுவா என எனக்கு பகன் சொன்னான். ௩ இந்திரனே! உனது அங்குசம் கொக்கி பெரியது, பொன்மயம், பொருள் அளிப்பதாகும்: அதனால் சக்திபதியே! மனைவியை நாடும் எனக்கு மனைவியை யளி. [சூ. அஉ. க—௩]

உ௫௬ மனத்தால் [அங்கிரசன்—மந்திரோக்த தேவதை]

க அபசிதமே![1] கூட்டினின்று பறவையைப்போல் பறந்து விடு; சூரியன் சிகிச்சையைச் செய்க: சந்திரன் உங்களைத் தூரமாக்குக. உ ஒன்று புள்ளி யுள்ளது, ஒன்று வெண்மையாகும், ஒன்று கருமை இரண்டு சிகப்புக்களாகும்; நான் அனைத்தின் நாமத்தையும் கிரகித்துள்ளேன். எங்கள் மனிதர்களைக் கொல்லாமல் நீங்கள் சென்று விடுங்கள். ௩ அபசிதமான இராமாயணி[2] மலடாவாள். அவள் பறந்து விடுவாள்; சிரங்கு—இங்கிருந்து பறந்துவிடும்; அது கண்டத்தினின்று மறையும். ௪ உன்னுடைய ஆஹுதியை மனத்தால் அநுபவித்துப் புசி சுவாஹா! ஏனெனில் நான் மனத்தால் இதை யளிக்கிறேன். [சூ. அ௩. க—௪]

உ௫௭ நிர்ருதி [அங்கிரஸன்—நிர்ருதி]

க. கட்டப்பட்ட இவர்கள் விடுதலை யடைவதற்காக நான் ஆஹுதி செய்யும் பயங்கர வாயுள்ள உன்னை, ஜனங்கள் புவி என எண்ணுகிறார்கள்; நான் உன்னை முற்றும் நிர்ருதி என அறிகிறேன். உ புவியே! நீ அவிகள் நிறைபவள்; எங்களிலுள்ள இது உனது பாகமாகும். இவற்றையும் அவற்றையும் பாவத்தினின்று நீக்கு; சுவாஹா! ௩ நிர்ருதியே! எதிர்ப்பற்ற நீ பந்தமாக்கும் இரும்புக் கட்டுக்களினின்று எங்களை விடுதலையாக்கு. யமன் மறுபடியும் எனக்கு உன்னை யளிக்கிறான்; அந்த யமன் மிருத்யுவுக்கு வணக்கமாகுக. ௪ ஆயிரம் மரணங்களுடன் இணைப்பாகி இரும்புக் கம்பத்திலே நீ கட்டப்பட்டுள்ளாய்; நீ யமன் பிதுருக்களுடன் ஒன்று சேர்ந்து இவனை உயரிய உலகத்துக்கு எழுச்சியாக்கு. [சூ. அ௪. க—௪.]

உ௫௮ யக்ஷ்மம் [யக்ஷ்ம நாசனகாம அதர்வன்—வனஸ்பதி]

க. இந்த திவ்ய வனஸ்பதியான வாரணன்—நோய்களை—விலக்குவான்; இம்மனிதனில் நுழைந்துள்ள யக்ஷ்மத்தை தேவர்கள் நீக்கியுள்ளார்கள். உ நாங்கள் மித்திரன் வருணன் இந்திரனது மொழியால், எல்லா தேவர்களது மொழியால் நாங்கள் உன்னுடைய யக்ஷ்மத்தை நீக்குகிறோம். ௩ எங்குஞ் செல்லும் இந்த சலங்களை, விருத்திரன் தடுப்பதுபோல், வைசுவாநர அக்கினியால், நான் உனது யக்ஷ்மத்தை நீக்குகிறேன். [சூ.அ௫.க—௩.]

உ௫௯ தலைவன் [விருஷகாம அதர்வன்—ஏகவிருஷன்]

க. இவன் இந்திரனுக்குத் தலைவன். சோதி புவிக்குத் தலைவன், எல்லாப் பொருள்களுக்குந் தலைவன், நீயே ஒரு தலைவனுவாயாக. உ கடல் நதிகளின் தலைமை, கனல்

---

1 கண்டமாலையே! 2 மறைந்துள்ளவள்.

உ௫௫ 'கருத்து—பெரியார்களது உதவியால் மனைவியை யடையுங்கள்.

உ௫௬ கருத்து—அபசிதம் நீக்கு.

உ௫௭ கருத்து—இரும்புக் கட்டுக்களினின்று எங்களை விடுதலையாக்கு.

உ௫௮ கருத்து—அனைவரின் நோயை நீக்குவது உங்கள் கடமை

புவியின் தலைமை, கனங்கள் விண்மீன்களின் தலைமை. ஏக தலைவனாய் நீயாவாயாக. ௩ நீ அசுரர்களின் சம்ராட்டன்: மனிதர்களின் உச்சி, நீ தேவர்களின் அரைபாகம். நீயே ஏக தலைவனாவாயாக. [௬. ௮௬. ௧—௩.]

௨௯௦ திரம் நில் [அதர்வன்—துருவன்]

௧. நான் உன்னைப் பற்றியுள்ளேன்; நீ அகத்திலுள்ளாய்; திரமாய் நில், திராணியமாகாதே. எல்லா சனங்களும் உன்னை விரும்புக: இராஷ்டிரம் உன்னிடமிருந்து தளர வேண்டாம். ௨ நீ இங்கு இரு, நீ இங்குமங்கும் அசையாதே: தளராமல் பர்வதம் போலிருக்கவும். இந்திரனே! நீ இங்கு திரமாய் நில்; நீ இங்கு இராஷ்டிரத்தைத் தரி. ௩ திரமான அவியால், திரமான இவனை, இந்திரன் தரித்துள்ளான்; சோமனும் பிரமணஸ்பதியும் இவனுக்கு ஆசிகூறுக. [௬. ௮௭. ௧—௩.]

௨௯௧ ஒரு மனம் [அதர்வன் துருவன்]

௧. ஜோதி திரமாகும், புவி திரமாகும். இந்த விசுவமான ஜகம் திரமாகும். இம்மலைகள் திரங்களாகும்; இந்த ஜனங்களின் இராஜா திரனாவான். ௨ உனக்கு இராஜாவான வருணன் திரமாவானாக. திவ்யமான பிருஹஸ்பதி திரனாவானாக: இந்திரனும் அக்கினியும் உனக்குத் திரமாவானாக. அவர்கள் திரமாய் உனக்கு இராஷ்டிரத்தைத் தரித்திடுக. ௩ நீ திரமாய், சிதறாமல் சத்துருக்களை நாசமாக்கு: உனக்கு எதிரியாய்த் தோன்றுபவர்களை கீழே விழச்செய்: எல்லா திசைகளும் ஒன்று சேர்ந்து, உனக்கு, ஒரு மனமுடனு

1 பலமுள்ளவன்.

௨௮௯ கருத்து—நீ ஒரே தலைவனாவாயாக.

௨௯௦ கருத்து—தளராமல் மலைபோலிரு.



ருக. இந்த சபையானது இங்கு உனது திரத்துக்காக பொருந்துக. [௬. ௮௮. ௧—௩.]

௨௯௨ மனம் என்வனை [அதர்வன்—மந்திரோக்த தேவதை]

௧ ஸோமனால் யளிக்கப்படும் வீரியமாகி, அன்பு தூண்டபவளது சிரத்தாலுண்டாகும்—பயனால்—உனது இருதயத்தை நாங்கள் துக்கமுடனாக்குகிறோம். ௨ நாங்கள் உனது இருதயத்தைத் துன்பமாக்குகிறோம்; நாங்கள் உனது மனத்தைத் துன்பமாக்குகிறோம்; புகை, காற்றை யநுசரிப்பது போல் உனது மனம் என்னை யநுசரித்திடுக. ௩ எனக்கு மித்திரனும் வருணனும், எனக்கு தேவியான சரஸ்வதியுமாவாளாக; புவியின் நடுவும், அதன் இரண்டு முனைகளும், உன்னை என்னுடன் சேர்த்திடுக. [௬. ௮௯. ௧—௩]

௨௯௩ அம்பு [அதர்வன்—உருத்திரன்]

௧ உனது அங்கங்களில், இருதயத்தில், ருத்திரன் எய்த அம்பை, இங்கு நாங்கள் உன்னிடமிருந்து தூரமாய் நீக்குகிறோம். ௨ உனது அங்கங்களில், நூறு நாடிகள் வியாபகங்களாகும்; நாங்கள் உனது இந்த சர்வத்தின் விஷங்களை விலக்குகிறோம். ௩ ருத்திரனே சரம்—எறியும் உனக்கு நமஸ்காரம், குறியான உனது—சரத்துக்கு—நமஸ்காரம்; பறக்கும் பகழிக்கு நமஸ்காரம்: தாக்கிய சரத்துக்கு நமஸ்காரம். [௬. ௯௦. ௧—௩]

௨௯௪ சிகிச்சை [பிருக்வங்கிரஸன்—தேவர்கள்]

௧ இந்த யவத்தை எட்டு யோகங்களாலும் ஆறு யோகங்களாலும் அவர்கள் உறுதியாய் உழுதார்கள். நான்

௨௯௧ கருத்து—நீ திரமாய் சிதறாமல் சத்துருக்களை நாசமாக்கு.

௨௯௨ கருத்து—மனைவியின் மனம் உன்னை யநுசரிக்கட்டும்.

௨௯௩ கருத்து—ருத்திரனது அம்புடன் இணங்கு.

அதனால் உன்னுடைய காய நோயை நீக்குகிறேன். உ காற்றுக் கீழ்பக்கம் வீசுகின்றது ; கதிரவன் கீழ்பக்கம் ஒளி வீசுகிறான் ; இம்மையாகாத—பசு—கீழ்பக்கம் கறக்கிறாள் ; உனது நோயும் கீழ்பக்கமாகுக. ங சலங்கள் சிகிச்சை யளிப்பவை யாகும் ; சலங்கள் நோய் நீக்குபவை யாகும் ; சலங்கள் எல்லா நோய்களையும் நீக்கும் ; அவை உனக்கு சிகிச்சையை யளித்திடுக. [சு. சுக. க—ங]

உசுடு குதிரை [அதர்வன்—வாஜீ]

க குதிரையே[1] ! நீ இணைக்கப்படுங்கால் காற்றைப்போல் துரிதமாகவும் ; மனோ துரிதமுடன் நீ இந்திரனுடைய தூண்டுதலில் செல். சர்வம் பற்றும் மருத்துக்கள் உன்னை இணைக்கட்டும் ; துவஷ்டா உனது பாதங்களில் துரிதத்தை வைத்திடுக. உ குதிரையே ! உன்னில் மர்மமாய் வைக்கப்பட்டுள்ள துரிதத்தால் காற்றிலே கருடனில் வியாபகமாகிச் செல்லும் சக்தியால் அசுவமே, பலமுடனாகி சமரில் விடுவித்து போரிலே வெல். ங பரியே, உனது காய்த்தை வகிர்ந்து, உனது காயம் உனக்கு சுகமும்—எங்களுக்கு—இன்பமும்—அளித்து—ஓடுக. மகத் தாய், துன்பமாகாமல் தரிப்புத் தலைவனை அவன் தன் ஒளியை ஜோதியில் தேவனைப்போல் ஸ்தாபித்திடுக. [சு. சுஉ. க—ங]

உசுசு வந்தனை [சந்தாதி—ருத்திரன்]

க யமனும், மிருத்யுவும், மாசழிப்போனும், நிர்ருதனும், பழுப்பு சர்வனும், வில்லாளனும், சேனைகளுடன் எழும்

1 பிராணனே.

உகச •கருத்து—சலமே சர்வ சிகிச்சை.

உசுடு கருத்து—எங்களுக்கு குதிரையால் இன்பமாகவேண்டும்.



எல்லா தேவர்களும், எங்களுடைய வீரர்களை விலக்குவார்களாக. உ மனத்தால் ஹோமங்களால் சுடரா செய்யால், வந்தனைக் குரியவர்களான வில்லாளர்களான சர்வனுக்கும், இராஜாவான பவனுக்கும், நான் வந்தனை யளிக்கிறேன். அவர்கள் விஷமிருப்பவற்றை எங்களிடமிருந்து தூரம் எடுத்துச் செல்க. ங விசுவே தேவர்களே எல்லாம் பற்றும் மருத்துக்களே ! அக்கினி சோமனே விஷமிருபவர்களினின்று எங்களைப் பாலனஞ் செய்யுங்கள் ; அக்கினி சோமனே புனித பலமுள்ள வருணனே : நாங்கள் வாதன் பர்ஜனியனுடைய நல் நினைவிலாவோமா. [சு. சுங. க—ங]

உசுஎ வணக்கிறேம் [அதர்வாங்கிரஸன்—ஸரஸ்வதி]

க நாங்கள் உங்களது மனங்களை ஒன்று வணக்கிறோம் ; நாங்கள் உங்களது விரதங்களை சங்கற்பங்களை, ஒன்று வணக்கிறோம் நாங்கள் விபரீத விரதமுள்ள உங்களை, ஒன்று வணக்கிறோம். உ நான்—என்—மனத்தால் உங்கள் மனங்களைப் பற்றுகிறேன் ; உங்கள் சித்தங்களுடன் எனது சித்தத்தை யநுசரியுங்கள், நான் உங்களது இருதயங்களை என் வசத்தி லாக்குகிறேன் ; என் போக்குப்பற்றி உங்கள் வழிகளுடன் வாருங்கள். ங எனக்கு ஜோதியும் புவியும் இசைந்துள்ளன ; சரஸ்வதி இசைந்துள்ளாள் ; இந்திரனும் அக்கினியும் எனக்கு இசைந்துள்ளார்கள் : சரஸ்வதியே ! இங்கு நாங்கள் வசித்தியாகவேண்டும். [சு. சுச. க—ங]

உசுசு கருத்து—நான் எல்லா தேவர்களுடைய நல் நினைவிலாகட்டும்.

உசுஎ கருத்து—விபரீத விரத முள்ளவர்களை வணைத்து விடுங்கள்.

உசுஅ குஷ்டம் [பிருக்வாங்கிரஸன்—வனஸ்பதி. மந்திரோக்த தேவதை]

க. தேவஸ்தானமான அசுவத்தம் இங்கிருந்து மூன்றா வது ஜோதியிலேயுண்டு; அங்கு தேவர்கள் அமுதக் கண் ணான குஷ்டத்தை கிரகித்தார்கள். உ ஜோதியின் சொர்ண பந்தமுள்ள சொர்ணக் கப்பல் சலனமாயிற்று. அங்கு தேவர்கள் அமுதமலரான குட்டத்தை கிரகித்தார் கள். ங நீ ஒஷதிகளின் கருப்பமாகும். பனிமய—மலை களின் கருப்பமாகும்; விசுவமான பொருளின் கருப்ப மாகும். இவனை எனக்காக நோயினின்று நீக்கு. [சு. கூரு. க—ங]

உசுகூ துன்பம் நீக்கு [பிருகுதாங்கிரஸன்—க—ங. வானஸ்பத்தி யம் க, ஸௌம்யம்]

க. பிருகஸ்பதியால் தூண்டப்பட்டு ஸோமனை அரசனாக உள்ள வெகு பல நூறு தோற்றங்களுடனாகும் ஒஷதிகள் எங்களைத் துன்பத்தினின்று நீக்குக. உ அவை என்னைச் சாபத் தீமையினின்றும் வருண—பயத்தினின்றும்—யம னின் பாசத்தி னின்றும் தேவர்களுக்கு மாறான எல்லாக் குறையினின்றும் நீக்குக. ங கண்ணினால் கருத்தால் வாக்கால் நாங்கள் உறக்கத்தில் விழிப்பில் ஏதேனும் குற்றம் நாங்கள் செய்திருந்தால் ஸோமனுடன் எங்க ளுக்கு சுவதாவால் அவற்றைச் சுத்தஞ் செய்க. [சு. கூசு. க—ங.]

உஎ0 ஜயிப்பவன் [அதர்வன்—மித்திர வருணன்]

க. ஜயிப்பவன் யக்ஞமாவான்; ஜயிப்பவன் அக்கினி; ஜயிப்பவன் ஸோமன் ஜயிப்பவன் இந்திரன், நான்

உசுஅ கருத்து—குஷ்டத்தால் நோய் கழி.
உசுகூ கருத்து—புலன் குற்றம் பிரி.



விசுவமான சேனைகளை ஜயிப்பதற்காக அக்கினி ஹோத் திரிகளான நாங்கள் இந்த அவியால் உபாசனை செய் வோம். உ மித்திரனே! வருணனே! அறிஞர்களே! உங்களுக்குச் சுவதாவாகுக. எங்கள் க்ஷத்திரத்தை இங்கு தேனால் செழுமை யாக்குங்கள், பிரஜையை மிகச் செய் யுங்கள்; நிர்ருதியை வெகுதூரத் துரத்துங்கள்; நாங்கள் செய்த எக்குற்றத்தையும், எங்களிடமிருந்து நீக்குங்கள். ங நீங்கள் உக்கிரமான இந்த வீரனை யநுசரித்து இன்ப மாகுங்கள்; நண்பர்களே! இந்திரனைத் தொடர்ந்து தரி யுங்கள்; அவன் கிராமஞ் ஜயிப்பவன். கோஜயிப்பவன், வஜ்ரக் கையுள்ளவன்; சத்துரு பலம் ஜயிப்பவன்; சக்தி யாலழிப்பவன். [சு. கூஎ. க—ங.]

உஎக இந்திரன் [அதர்வன்—இந்திரன்]

க இந்திரன் ஜயிக்கட்டும்; அவன் ஜயிக்கப்படாமலாகட் டும்; அரசர்களில் அதி இராஜனாய் அரசுபுரியட்டும்; நீ இங்கு புகழப்படுபவன். போற்றப்படுபவன், பேணப்படுப வன். வணங்கப்படுபவன், அருகப்படுபவனாக நிகழவும். உ இந்திரனே! நீ அதி இராஜன், கீர்த்திவாய்பவன் நீ; சனங்களின் அரசன், நீ இந்த தேவ சனங்களின் இராஜனாகவும்: தேய்வன்னியில் தீர்க்காயுசுடனான க்ஷத் திரம் உனதாகுக. ங இந்திரனே! நீ கீழ்த்திசையின் இராஜா. எதிரியழிக்கும் விருத்திர சம்ஹாரனே! நீ வடதிசையின் இராஜன், எங்கு நதிகள் பாய் கின்றனவோ, அது—வரை—உனது ஜயமாகும்: தெற் கில் விருஷபனான நீ, அவிக்கருகனாகச் செல்கிறாய். [சு. கூஅ. க—ங]

உஎ0 கருத்து—இந்திரனைத் தொடர்ந்து எதையும் பற்றுங்கள்.
உஎக கருத்து—இந்திரனால் ஜயமடையுங்கள்.

௨௭௨ காப்பு [பிருக்வங்கிரசன்வனஸ்பதி ஸோமன், ஸவிதா]

௧ இந்திரனே! நீ விரிவாயிருப்பதால் நான் உன்னை—யணுகி—துன்பத்தின் முன், உன்னை யழைக்கிறேன்; நான் ஒரேதோற்றமும் பல நாமங்களுள்ளவனும் உக்கிரமாய், திருத்துபவனாயுமுள்ளவனை யழைக்கிறேன். ௨ எங்களைக் கொல்ல விரும்பி, இன்று எதிரி சேனையினாயுதம், சலனமாவதால் நாங்கள் எங்களைச்சுற்றி முற்றும் இந்திரனின் இருகைகளைச் சாய்க்கிறோம். ௩ நாங்கள் காப்பவனான இந்திரனின் இருகைகளை, எங்களைச் சுற்றி முற்றும் சாய்க்கிறோம்; தேவஸவிதாவே! இராஜனான ஸோமனே; சுவஸ்திக்காக நீ என்னை நல்ல மனத்துடனாக்கு. [சு. ௯௯. ௧—௩]

௨௭௩ தந்துள்ளான் [கருத்மான்—வனஸ்பதி]

௧. தேவர்கள் தந்துள்ளார்கள், சூரியன் தந்துள்ளான்[1] ஜோதி தந்துள்ளான்; புவி தந்துள்ளாள்; மூன்று ஸரஸ்வதிகள் ஒரே சித்தமுடன் விஷத்தூற்றைத் தந்துள்ளார்கள். ௨ உபஜீகர்களே: பாலை வனத்தில் தேவர்களால் பொழியப்பட்டு தேவர்களால் தூண்டப்படும் உலகத்தால், நீங்கள் இந்த விஷத்தைத் தூற்றுங்கள். ௩. நீ அசுரர்களின் பெண் நீயே தேவர்களின் சகோதரி நீ சோதியினின்று தோன்றி புவியினின்று தோன்றி நீ விஷத்தை இரஸமற்று செய்துள்ளாய். [சு. ௧௦௦. ௧—௩]

௨௭௪ வீரியம் [சேபப் பிரதத்ன காமோதர்வாங்கிரசன் பிரமணஸ்பதி]

௧. நீவர்ஷிக்கவும், விம்மவும், விரியவும், விருத்தியாகவும்,

1 விஷ சிகிச்சையை.

௨௭௨ கருத்து—தூய மனம் வேண்டும்.

௨௭௩ கருத்து—விஷம் விலக்கு



உனது அங்கம், அங்கமங்கமாய் ஓங்குக; அதனால் ஸ்திரீயை ஜயஞ்செய். ௨. எதனால் பலமற்றவனை பலமுள்ளவர்களாய் அவர்கள் செய்கிறார்களோ, எதனால் நோயுள்ளவனைத் தூண்டுகிறார்களோ; அதனால் பிரமணஸ்பதியே! அவன் அங்கத்தை வில்லைப்போல், வலிமையுடனாக்கு. ௩ நான் உனது அங்கத்தை வில்லில் நாணைப்போல், வலிமை யாக்குகிறேன்: அரிணம் பெண்மானைப்போல் நீ சதா தளர்ச்சி யன்னியில் ஏறு. [சு. ௧௦௧. ௧—௩]

௨௭௫ உன் மனம் [அபிஸம்மனஸ்காமோ ஜமதக்கினி—அசுவினிகள்.]

௧. அசுவினிகளே இக்குதிரை ஒன்று வந்து ஒன்று விசைவதுபோல உனது மனம் எனக்கு ஒன்று இசைந்து வருக. ௨ நான் உனது மனத்தை பரிமன்னன் புரவியைப் போல இழுக்கிறேன். பெருங் காற்றால் பறக்கும் புல்லைப்போல் என்னில் உனது மனம் இணங்குக. ௩. நான் பகனுடைய கைகளால் துரிதமாயும் அஞ்சனமாயும் இனிமையாயும் இலாமிச்சையாயும் இணக்கமுமாக சாதனத்தை வகிக்கிறேன். [சு. ௧௦௨. ௧—௩]

௨௭௬ பந்தம் [உச்சோனன்—இந்திராக்கினி உத வெகு பல தேவர்கள்]

௧. பிருஹஸ்பதி கயிற்றைச் செய்க; ஸவிதா உங்களுக்கு கயிற்றைச் செய்க; மித்திரன் அரியமான் கயிற்றை, பகனும் அசுவினிகளும் கயிற்றைச் செய்க. ௨ நான் முதல் பந்தனஞ்செய்கிறேன், நான் முடிவை நான் நடுக்கலை பந்தனஞ் செய்கிறேன். இந்திரன் அவர்களைப் பாசத்

௨௭௪ கருத்து—நீ ஆண்மையுடனாகை வேண்டும்.

௨௭௫ கருத்து—என்னில் உன் மனம் இணங்கட்டும்.

தால் சூழ்ந்துள்ளான் அக்கினியே! நீ அவர்களை பாசத்தால் பந்தனஞ் செய். சேனைகளில் தங்கள் கொடிகளை உயர்த்தி சமருக்குச் சேரும் அங்குள்ளவர்களை, இந்திரன் பாசத்தால் சூழ்ந்துள்ளான்; அக்கினியே நீ அவர்களை ஒன்று கட்டு. [சூ. ௧௦௩. ௧—௩]

௨௭௭ **எதிரி பந்தம்** [பிரசோனன்—இந்திராக்கினி உத வெகு பல தேவதைகள்]

௧. பாசத்தால் பொருந்தும் பாசத்தால் பிணைத்து நாங்கள் பகைவர்களைப் பந்தஞ் செய்கிறோம்; அவர்களின் பிராணன் அபானங்களை, சிவனால் சிவர்களை நான் சேதித்துள்ளேன். ௨. இந்திரனால் தவமுடன் தீட்சணமாகும் இந்த பாசத்தை நான் செய்துள்ளேன்; அக்கினியே இங்குள்ள எமது எதிரிகளை நீ பந்தஞ் செய். ௩. இந்திரனும் அக்கினியும் இராஜா சோமன் என்னும் நண்பனோடு அவர்களை கட்டுக; இந்திரன் மருத்துக்களுடன் எங்களது எதிரிகளுக்கு பந்தத்தைச் செய்க. [சூ. ௧௦௪. ௧—௩]

௨௭௮ **இருமல்** [உன்மோசனன்—காசம்]

௧. மனம் மனச் சின்னங்களுடன் துரிதமாய் பறப்பது போல, இருமலே மனத்தின் துரிதவேக மநுசரித்து நீ பறந்து விடு ௨. அதி கூரிய அம்பு வேகமாய் பறப்பது போல, இருமலே! நீ புவியின் எல்லை யநுசரித்து பறந்து விடு. ௩. சூரியனுடைய இரசிமி துரிதமாய் பறப்பதுபோல, இருமலே நீ கடலின் பிரவாஹ மநுசரித்துப் பறந்துவிடு. [சூ. ௧௦௫ ௧—௩]

---

௨௭௬ கருத்து—நீ சத்துருக்களைச் சூழ்ந்து கொல்லு.

௨௭௭ கருத்து—நான் சத்துரு சிவன்களை சேதித்து விடுவேன்.

௨௭௮ கருத்து—இருமல் என்னும் மனோ அலையை நீக்கு:



௨௭௯ **வீடு** [பிரமோசனன்—தூர்வாசாலை]

௧. உனது வரும் வழியில், போகும் வழியில், மலரான துருவம் ஏறுக; அங்கு சல ஊற்றுக் கிளம்புக. கமலம் நிருந்த குளம் கிளம்புக. ௨. இது நீமே பாயும் சலத்தின் வழி; சமுத்திர ஸ்தானம், குளத்தின் நடுவே நம்முடைய வீடுகளுண்டு. உனது முகங்களை திருப்பிக் கொள். ௩. வீடே; உன்னை பனிப் போர்வையால் நாங்கள் சூழ்கிறோம்; எங்களுக்குக் குளம்போல் நீ குளிர்ச்சி செய். அக்கினி சிகிச்சையைச் செய்க. [சூ. ௧௦௬. ௧—௩]

௨௮௦ **ஜித விசுவன்** [சந்தாதி—விசுவஜித்தன்]

௧. விசுவஞ்ஜயிப்பவனே; விடுவிப்பவனுக்கு என்னைச் சேர்ப்பி: விடுவிப்பவனே! எங்களது சர்வமான இருகால்களையும் எங்கள் நாற்கால்களையும் எங்களது செல்வத்தையும் இரட்சி. ௨ விடுவிப்பவனே; விசுவஞ் ஜயிப்பவனுக்கு என்னைச் சேர்ப்பி; விசுவஞ் ஜயிப்பனே! எங்களது சர்வமான இருகால்களையும் எங்கள் நாற்கால்களையும் எங்கள் செல்வத்தையும் இரட்சி. ௩ விசுவஞ் ஜயிப்பவனே என்னை மங்களத்துக்குச் சேர்ப்பி. மங்களமே எங்களது சர்வமான இருகால்களை எங்கள் நாற்கால்களையும் எங்கள் செல்வத்தையும் இரட்சி. ௪ மங்களமே! என்னை விசுவம் பற்றுபவனில் சேர்ப்பி; விசுவம் பற்றுபவனே! எங்களது சர்வமான இருகால்களையும், எங்கள் நாற்கால்களையும் எங்கள் செல்வத்தையும் இரட்சி [சூ ௧௦௭ ௧—௪]

௨௮௧ **மேதை** [சௌனகன்—௧௧ மேதை ௪ அக்கினி]

௧. மேதையே![1] நீ எங்களுக்கு முதன்மையாய், பசுக்க

---

1 ஞானம்.

௨௭௯. கருத்து—அனல்பாயமுண்டு. புனல் சாதகம் பற்று.

ளுடன், குதிரைகளோடு சூரியனின் கதிர்களுடன் வா. நீ எங்களுக்கு யக்ஞாருகன். ௨ பிரம பூரணமாகி, பிரா மணனால் துரிதமாகி, ரிஷிகளால் துதிக்கப்பட்டு, பிரம சாரிகளால் பாலனமான, மேதையை நான் தேவரட்ச ணைக்கு முதன்மையா யமைக்கிறேன். ௩ ரிபுக்கள் அறி யும் மேதையை, அசுரர்கள் அறியும் மேதையை, ரிஷிகள் அறியும் மேலான மேதையை, நாங்கள் என்னில் நுழை யச் செய்கிறோம். ௪ மேதை மிகுந்த பொருள் செய்யும் ரிஷிகள் அறியும் மேதையால், அக்கினியே! மேதை மிகு பவனாக என்னை இன்று செய். ௫ மேதையை மாலையில், மேதையை காலையில், மேதையைப் பகலில், மேதையை சூரிய இரசிமிகளில், சொல்லால். நாங்கள் எங்களில் நுழையச் செய்கிறோம். [சூ ௧௦௮. ௧—௫]

௨௮௨ பிப்பலீ [அதர்வன்—மந்திரோக்த பிப்பலீ பேஷஜம்]

௧. பிப்பலீ![1] வெட்டுப்—புண்ணுக்கு மருந்தாகும்; அதி ஆழப்புண்ணுக்கும் சிகிச்சையாகும். தேவர்கள் அதைப் பக்குவஞ் செய்துள்ளார்கள்; அது சீவனுக்குப் போது மானது. ௨ பிறப்பினின்று புலனாகுங்கால் பிப்பலீ பரஸ்பரம் சொல்லிக் கொள்வதாவது நாம் எவனை சீவ னுடன் சேர்க்கிறோமோ அப்புருடன் துன்பமாவதில்லை. ௩ அசுரர்கள் உன்னைக் கெல்றார்கள். தேவர்கள் உன்னை மறுபடியும் உயரத் தூக்குகிறார்கள்; நீ வாதகிருதத்துக்கு[2] மருந்தாகும்; அப்படியே நீ புண்ணுக்கும் மருந்தாகும் [சூ ௧௦௯ ௧—௩]

1 ஒரு ஔஷதத்தின் பெயர் 2 ஒரு நோவுக்கு

௨௮௧ கருத்து. மேதையைப் பற்று.

௨௮௨ கருத்து. ஔஷதத்தால் நோய் நீங்கு



௨௮௩ மகன் [அதர்வன்—அக்கினி]

௧. பழையவனே! நீ யக்ஞங்களில் போற்றுவதர்க் கருகன். பழைய புதிய ஹோதாவாய் நீ உட்காருகிறாய்; அக்கினியே, நீ உனது தேகத்தைப் பூரணஞ் செய்து எங்களில் சௌபாக்கியத்தை யளி. ௨ ஜ்யேஷ்டாக்கினி யில், யமனுடைய இரு விடுவிப்பவர்களில் சனனமாகு பவனை மூலபர்ஹணத்தினின்று[1] காக்கவும்: நூறு சரத்துக்களான தீர்க்காயுசுக்கு, அவனை எல்லாக் கஷ் டங்களினின்று அவன் நீக்கட்டும். ௩ புலியின் தினத்தில்[2] வீரன் பிறந்துள்ளான்; நட்சத்திரனது மகன் நல்ல சூரனாய் சனனமாயுள்ளான். அவன் ஓங்கி தந்தை யைக் கொல்லற்க. தன்னைத்தோற்றுவித்த தாயையுந் துன்பஞ்செய்யற்க. [சூ ௧௧௦. ௧—௩]

௨௮௪ உன்மத்தன் [அதர்வன்—அக்கினி]

௧. அக்கினியே! நீ எனக்கு, இங்கு பந்தமாகி அடக்கப் பட்டு புலம்பும் இப்புருஷனை விடுவி; பிறகு அவன் வெறி யினின்று விலகுங்கால் உனக்கு பாகத்தைச் செய்வான். ௨ உன்மனம் ஆத்திரமுடனால் உனக்கு, அதை அக் கினி அமைதி செய்க; அறியும் நான் நீ உன்மத்தம் அகாமலிருக்க மருந்தைச் செய்கிறேன். ௩ தேவ பாவத் தினின்றாகும் உன்மத்தத்தினின்றும், இராட்சதர்களின் உன்மத்தத்தினின்றும், அறியும் நான் அவன் உன்மத்தம் நீங்க மருந்தைச் செய்கிறேன். ௪ அப்ஸரஸர்கள் மறு படியும் உனக்களித்திடுக; இந்திரன் மறுபடியும் பகன் மறுபடியும் அளித்திடுக; நீ உன்மத்த மாகாமலிருக்க விசுவேதேவர்கள் உனக்களித்திடுக. [சூ. ௧௧௦ ௧—௪]

1 ஒரு நஞ்சுக்கொடியினின்று 2 வீரர் வீரம் புலனாகுந் தினத்திலே

௨௮௩ கருத்து. உங்கள் மக்கள் வீரர்களாவார்களாக.

௨௮௪ கருத்து. உன்மத்த மொழி.

௨௮௫ விடுதலையாக்கு [அதர்வன்—அக்கினி]

௧ அக்கினியே! இவன் அவர்களின் பெரியவனைக் கொல்லற்க.* நிர்மூலத்தினின்று அவனைப் பாலனஞ் செய். நீ அறிந்து, பற்றுபவாது பாசங்களை பிரித்து விடு. விசுவே தேவர்கள் உங்களுக்கு அநுமதித்திடுக. ௨ அக்கினியே! மூவர்களை, கட்டப்பட்டுள்ள மூன்று பாசங்களை தகர்த்தெறியும் அறியும் நீ, பற்றுபவர்களது பாசங்களை பிரித்துவிடு. தந்தை தாய் மகன் அனைவரையும் விடுதலையாக்கு. ௩ ஒவ்வொரு அங்கத்திலும், பந்தமாகி பந்தஞ் செய்யப்பட்ட பரிவிருக்தனுடைய[1] பாசங்களை பிரித்துவிடு. அவை பிரிப்பதர்க்கானவை, பூஷணனே! கருச் சிதைப்பவனில் கஷ்டங்களை கழித்து விடு. [௬. ௧௧௨. ௧—௩]

௨௮௬ பறிப்பு [அதர்வன்—பூஷணன்]

௧ தேவர்கள் அந்தத் தீமையை திருதனில் துடைத்தார்கள்; திருதன்[2] அதை மானிடர்களில் துடைத்தான்; அதனால் பற்று—பறிப்பு உன்னைப் பற்றினால் பிரமத்தால் தேவர்கள் அதனை உன்னிடமிருந்து நீக்கட்டும். ௨ புன்மையே! புகைகளையும் பிரகாசங்களையும் பிரவேசி. மப்புக்களில் மூடுபனிகளில் சென்று விடு. நதிகளின் நுரைகள் வழியாய் மறைந்துவிடு. பூஷணனே! கருச் சிதைப்பவனில் கயத்தை கஷ்டத்தைத் துடைத்து விடு. ௩ திருதனால் துடைக்கப்பட்டுள்ள மானிடர்களின் புன்மைகள் ௧௨ வகையாய் வைக்கப்பட்டுள்ளன; அதனால்

1 இளையவன் விவாஹமாகி மணமாகாத மூத்த சகோதரனது.

2 தாய், தந்தை, மகன்.



பறிப்பு உன்னை யணுகினால், பிரமத்தால் தேவர்கள் உனக்கு அதை யழித்திடுக. [௬. ௧௧௩. ௧—௩]

௨௮௭ ஆதித்தியர்களே [பிரமன்—விசுவேதேவர்கள்]

௧ தேவர்களே! திவ்யர்களே நாங்கள் தேவகோபஞ் செய்யும் எதைச் செய்திருந்தாலும் அதனாலாகும் துன்பத்தினின்றும், ஆதித்தியர்களே! ருதத்தின் ருதத்தால் எங்களை விடுதலை செய்யுங்கள். ௨ ஆதித்தியர்களே! யக்ஞார்கர்களே யக்ஞஞ் சுமக்கும் நீங்கள் யக்ஞ பூரணமாக்க விரும்பி பூர்த்தியாகாமலுள்ள எங்களை ருதத்தின் ருதத்தால் இங்கு விடுதலை செய்யுங்கள். ௩ தேவர்களே! யஜமானர்களான நாங்கள் திருப்பன்னியில் புஷ்டிபிரும் சாதனத்துடன் நெய்களைப் பொழிந்து யக்ஞத்தை உங்களுக்குப் பூர்த்தியாக்க விரும்பி பூர்த்திசெய்ய முடியாமலுள்ளோம். [௬. ௧௧௪. ௧—௩]

௨௮௮ பாவம் [பிரமன்—விசுவேதேவர்கள்]

௧ தெரிந்தோ தெரியாமலோ நாங்கள் பாபஞ் செய்திருந்தால் விசுவேதேவர்களே! நீங்கள் இணைந்து அப் பாபத்தினின்றும் எங்களை விடுதலையாக்குங்கள். ௨ தூக்கத்திலோ விழிப்பிலோ, நான் பாபஞ் செய்திருந்தால், இருப்பதும் இருக்கப்போவதும் அப் பாபத்தினின்றும் என்னை கட்டுக் கம்பத்தினின்று போல் விடுதலை செய்க. ௩ கம்பத்தினின்று விடுதலையானவன்போல், வியர்வையுள்ளவன் ஸ்னானஞ் செய்து மலத்தினின்று நீங்குவது போல், பவித்திரத்தால் புனிதமாகும் நெய்போல் எல்

௨௮௬ கருத்து—பறிப்புப் பிரி.

௨௮௭ கருத்து. குற்றத்தினின்று நீங்குங்கள்.

லாம் என்னைப் பாவத்தினின்றும் பிரித்திடுக. [சா. ககரு. க—ங]

உஅகூ வைவஸ்வதன் [ஜாதிகாயனம் — விவஸ்வான்]

க உழுபவர்கள், அறிவால் பூர்வத்தில் கெல்லி அன்னத்தைக்கண்டு யமச் சேர்க்கையை செய்வதுபோல் வைவஸ்வத இராஜனுக்கு நானும் அதனையே செய்தளிக்கிறேன்! எங்களுக்கு உணவு யக்ஞாருகமாயும் இனிமையாயுமாகுக. உ வைவஸ்வதன் எங்களுக்கு விவாகத்தைச் செய்க, தாயினிடமிருந்து தோன்றிய எங்களுக்கு வந்த பாவத்தையும் கோபத்தில் எங்கள் தந்தை செய்த பாவத்தையும் நீக்கி தேன் பாகமுள்ள அவன் எங்களைத் தேனுடன் சேர்ப்பான். ங எங்கள் தாயினிடமிருந்தோ, எங்கள் தந்தையினிடமிருந்தோ, சகோதரனிடமிருந்தோ, மகனிடமிருந்தோ, சித்தத்திலிருந்தோ, இந்தப் பாவம் எங்களுக்கு வந்திருந்தால், அவை அனைத்தும், எங்களில் குளியும் பிதுருக்களின் கோபமும் மங்களங்களாகுக. [சா. ககசா. க—ங]

உகூ0 கடன் [அகிருணகாம கௌசிகன்—அக்கினி]

க. கடன் வாங்கும் எதை நான் திருப்பி யளிக்காமல், புசிக்கிறேனே, எமனுடைய எந்த பலியினால் நான் சலனமாகிறேனே, அக்கினியே! அதனால் நான் கடனன்னியிலாகுக. நீ எல்லாப் பாசங்களைத் தகர்ப்பதற்கு யறிவாய். உ இங்கு இருப்பதனால் நாங்கள் திருப்பி யளிக்கிறோம்: சீவிக்கும் நாங்கள் சீவர்களுக்கு இந்தக் கடனை யளிக்கிறோம். அக்கினியே! நான் கடன் வாங்கி எத்தானியத்தைத் தின்னேனே அதனால் நான் கடனன்னியி

உஅகூ கருத்து—விடுதலை செய்யுங்கள்.



லாகட்டும். ங இங்கு கடனன்னியில், அங்கு கடனின்னியில் மூன்ருவதுலகத்தில் நாங்கள் கடனன்னியிலாகவேண்டும்; நாங்கள் கடனன்னியில் தேவர்கள் பிதுருக்கள் செல்லும் உலகங்களில் வழிகளில் வசிக்கட்டும். [சா. ககஎ. க—ங.]

உகூக அப்சரசர்கள் [அகிருணகாம கௌசிகன்—அக்கினி]

க. காயங்களின் வழியைப் பற்ற விரும்பி குற்றங்களை எங்கள் கைகளால் செய்திருந்தாலும், உக்கிரஞ் ஜயித்து உக்கிரங் காண்பவர்களான இரு அப்சரஸர்கள் எங்களுடைய அக்கடனை இன்று தீர்ப்பார்களாக. உ உக்கிரமாய் பார்ப்பவனே! இராஷ்டிரந் தரிப்பவனே! நீங்கள், காய்களில் நிகழ்ந்த குற்றங்களை மன்னியுங்கள்; கடனின்று கடனை எங்களிடமிருந்து பெற விரும்பும் எவரும் கயிற்றுடன் யமனுலகத்தில் எங்களிடம் வராமலிருப்பாராக. ங நான் எவனுக்குக் கடன்பட்டுள்ளேனே எவனுடமனைவியை அணுகுகிறேனே எவனிடம் யாசகத்துக்குச் செல்லுகிறேனே—அவர்கள் என்னிடம் அதிகமாய் பேசாமலிருக்கட்டும்; தேவபத்தினி அப்ஸரஸர்களான நீங்கள் கவனியுங்கள். [சா. ககஅ. க—ங.]

உகூஉ வைசுவாநரன் [அகிருணகாம கௌசிகன்—அக்கினி]

க. காய் ஆடாமல் நான் கடன் பட்டாலும், திருப்பித்தர எண்ணாமல் வாக்குறுதி செய்தாலும், எங்களுடைய உபரிய அதிபலனான வைசுவாநரன் நற்செய லுலகத்துக்கு எங்களை அழைத்துச் செல்க. உ தேவதைகளுக்கு கடனிருந்தால் நான் அதை வைசுவாநரனுக்குத் தெரியச்

உகூ0 கருத்து—கடன் கழிந்த வாழ்வே வாழ்வு.

உகூக கருத்து—கடன் பட்டால் கொடுத்துத்தானாகவேண்டும்.

செய்கிறேன்; இந்தப் பாசங்களை யெல்லாம் தகர்த் தெறிய அவன் அறிவான்; இனி நாங்கள் பக்குவத் துடன் சேர்ந்து ஒன்று பொருந்துவோமாக. ௩ நான் வாக்குறுதிக்கு, ஆசைக்கு, மாறாய் விரைந்து, அறியாமல் மனத்தால் யாசித்து எக்குற்றஞ் செய்தாலும், நான் அவற்றை நீக்குகிறேன்; புனிதஞ் செய்யும் வைசுவாநரன் என்னைப் புனிதம் செய்க. [௬. ௧௧௨. ௧—௩]

௨௩௩ நற்செயலுலகம் [கௌசிகன்—மந்திரோக்த தேவதை]

௧. நாங்கள் வானத்தையும் புவியையும் ஜோதியையும் தாயையும் தந்தையையும் இம்சை செய்திருந்தால், இந்த காருஹபத்யாக்கினி அக்குற்றத்தினின்று—நற்செயலுலகத்துக்கு எங்களை அழைத்துச் செல்க. ௨ தாயான தரணியும், நாங்கள் தோன்றும் அதிதியும், சகோதரனை வானமும், எங்களை அபவாதத்தினின்று—நீக்குவார்களாக. எங்களுடைய பிதாவான ஜோதி, பிதாவுக்குரிய குற்றத்தினின்று நீக்கி—எங்களுக்கு மங்கள மாவானாக; நான் எனது பந்துக்களிடஞ் சென்றுள்ளதால்—அவர்களுடைய—உலகத்தினின்று விழாமலாவேனாக. ௩ எங்கு நல்ல இருதயமுள்ளவர்கள், நற்செயல் செய்பவர்கள், தங்களது காய நோய்களை நீக்கி, இன்பமாயுள்ளார்களோ—எச்—சுவர்க்கத்தில் அங்க ஈனமற்று கேடன்னியிலுள்ளார்களோ, அங்கு நாங்கள் பிதாக்களையும் புத்திரர்களையும் பார்க்கவேண்டும். [௬. ௧௨௦. ௧—௩.]

௨௩௪ சுகிருதம்—உலகம் [கௌசிகன்—மந்திரோக்தன்]

௧. உயர்வாயும் தாழ்வாயுமுள்ள வருணனுடைய பாசங்களை அவிழ்ப்பவனான நீ எங்களிடமிருந்து, அவற்றை

௨௩௨ கருத்து—உன் குற்றத்தை நீயே நீக்கு.
௨௩௩ கருத்து—அபவாதம் நீக்குங்கள்.



நீக்கு: தீமையையும் துட்டக் கனவையும் எங்களிடமிருந்து நீக்கு; அப்பால் நாங்கள் நற்செயலுலகத்துக்குச் செல்வோமாக. ௨ நீ கட்டையிலோ கயிற்றிலோ கட்டப்பட்டிருந்தாலும்; பவியிலோ மொழியிலோ கட்டப்பட்டிருந்தாலும் இந்த காருகப்பத்திய அக்கினி அக்கட்டத்தினின்று — நற்செய லுலகத்துக்கு உன்னை அழைத்துச் செல்லும். ௩ விடுவிப்பவர்கள் என்னும் பெயர்களுள்ள இரு மங்களங்களான நட்சத்திரங்கள் உதயமாயுள்ளன; இங்கு அவர்கள் அமுதப் பொருளை யளித்திடுக; கட்டவிழ்ப்பவன் முன் செல்க. ௪ நீ எங்குஞ்செல்லு; உலகத்தைச் செய்; கட்டுக்களினின்று கட்டப்பட்டுள்ளவனை நீ விடுதலை செய்க; மூலஸ்தானத்தினின்று விழுந்து இளஞ் சிசுவைப்போல எல்லா வழிகளிலும் நீ வசி. அனலே! [௬. ௧௨௧. ௧—௪]

௨௩௫ விசுவகர்மன் [பிருகு—விசுவ காமன்]

௧ நான் அறிந்து இந்த பாகத்தை உனக்களிக்கிறேன்; விசுவகர்மனே! ருதத்தின் முதல் ஜனனே; அது எங்களால் மூப்புக்கப்பால ளிக்கப்பட்டுள்ளது: நாங்கள் ஒருமையுடன் அறுகாத இழை யநுசரித்துக் கடப்போம். ௨ எவர்கள் வழியினால் பித்ரு சேர்க்கையை யளித்துள்ளார்களோ அந்தச் சிலர்கள் இந்த விசாலமான இழையைக் கடந்து செல்லுகிறார்கள்; உறவினர்களற்றும் இவர்களில் சிலர் அளிக்கச் சக்தியுள்ளவர்களாகி இங்கு அளித்தாலும் கொடுத்தாலும் இதுவே சுவர்க்கமாகும். ௩ நீங்கள் இருவர்களும் இதை யநுசரித்துப் பற்றுங்கள்; நீங்கள் ஒன்று சேர்ந்து ஒருமையுடன் பற்றுங்கள்; சிரத்தையுள்ளவர்கள் இந்த உலகத்தை யநுசரிக்கிறார்கள்.

௨௩௪ கருத்து—அடிமையை நீ விடுதலை யாக்கு.

